உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# நீதிமாலை.

மூலமும்

4663/.

பொழிப்புரையும்

இது

ஆரணி ஜாகிர் காமக்கூர் தமிழ்ப்பண்டிதர்

ம-ா-ா-ஸ்ரீ,

மு. சுந்தர முதலியாரவர்கள்

மாணவருளொருவராகிய

நா. பெருங்கடம்பனூர்

கு. நடேசநாட்டாரால்

இயற்றப்பட்டு

வேலூர்

GF

ஸ்ரீ விநாயகர் அச்சுக்கூடத்திற்

)-,INNa,1

பதிப்பிக்கப்பட்டது

சாலிவாகன சகாப்தம்

A

௲௮௱௩௰௫-இடபமதி 1835

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# நீதிமாலை

மூலமும்

பொழிப்புரையும்

இது

ஆரணி ஜாகிர் காமக்கூர் தமிழ்ப்பண்டிதர்

ம-ள-ள-ஸ்ரீ,

**மு. சுந்தர முதலியாரவர்கள்**

மாணவருளொருவராகிய

நா. பெருங்கடம்பனூர்

**கு. நடேசநாட்டாரால்**

இயற்றப்பட்டு

**வேலூர்**

சுந்தர விநாயகர் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

சாலிவாகன சகாப்தம்

ஸ்ரீ ஆநந்த-இடபமதி 1835

GF
O-,INNa, I
A

உ

# பிரகடனம்.

இப்புத்தகம் வேண்டியவர்கள் கீழ் குறிக்கப்படுபவர்களிடத்திற் பெற்றுக்கொள்ளலாம்.

**பா. தேவராஜுலு செட்டியார்,**
ரகுநாதபுரம்,
ஆரணி ஜாகிர்.

**கி. முருகப்ப செட்டியார்,**
திமிரி,
வாலாஜா தாலூகா.

**குப்பு செட்டியார்,**
உப்புப்பேட்டை,
திமிரி போஸ்டு.

புத்தக வியாபாரிகளுக்கும் பாடசாலை உபாத்தியாயர்களுக்கும் கமிஷன் சேர்த்துக்கொடுக்கப்படும்.

விலை அணா ஒன்றே

தபால் செலவு பிரத்தியேகம்.

உ

திருச்சிற்றம்பலம்.

# சாத்துகவிகள்

---

ஆரணி டி. மு. கோடீக்ளார்க்கும் கம்பராமாயணப்

பிரசங்கியுமாகிய ம-ா-ா-ஸ்ரீ, தெள்ளூர்

**நாராயணையரவர்கள் இயற்றிய**

**அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.**

வடமொழியி னுரைநீதி நூற்றேர்ந்து தென்மொழிதேர்
வாணர் மெச்சத்
திடமுளநல் விருத்தப்பா விலினீதி மாலையினைத்
திரட்டித் தந்தான்
மடவயல்சூழ் பெருங்கடம்பனூர்க் குருசாமிப் பெயர்வே
டந்த செம்மல்
நடமாடு மன்றிறைதாள் மறவாத நடராச
நாட்டான் மாதோ.

---

இந்நூலாசிரியருக்குப் போதகாசிரியரும்

தமிழ்ப்பண்டிதருமாகிய ஆரணி ஜாகீர் காமக்கூர்

**ம-ா-ா-ஸ்ரீ, மு. சுந்தர முதலியாரவர்கள் இயற்றிய**

# சிறப்புப்பாயிரம்.

---

**நேரிசையாசிரியப்பா**

உலகெலாம் பரவு முமையரன் மாலின்
மலர்ச்சிலம் படியை வணங்கியர்ச் சிக்கு
மந்திரங் கொண்டது மறையோ ரிடஞ்சு
தந்திர மாகத் தவழ்வதும் பெரிய

கவிகளாற் செய்த காவியங் களுக்குச்
செவியுறு கண்ணாய்த் திகழ்வது மான
வடமொழி தன்னுள் வயங்குநீ திகளைக்
குடமுனி தமிழிற் குலவிய முப்பது
விருத்தப் பாவாய் விரித்ததன் பொழிப்பு
முரைத்தனை வோரு மோர்ந்துய நீதி
மாலை யெனப்பேர் வைத்தச் சிட்டனன்
ஆலை யங்களு மறச்சா லைகளுஞ்
சாகையாய் வளருஞ் சகலவ ளஞ்சேர்
நாகையைச் சார்ந்த ஞானியர் தங்கும்
பெருங்க டம்பனூர் பேணிய தவத்தா
லருங்குண மெல்லா மமர்ந்தோன் றூய்வந்
துதித்தைந் தக்கர மோதிச் சிவனடி
மதித்துத் துதிப்போன் வாய்மைக் காகரன்
பன்மா நூற்கள் பயின்ற
நன்மா ணாக்க னடேசநா வலனே.

---

ம-ள-ள-ஸ்ரீ, முத்தமிழ் ரத்நாகரம் சைவஸ்ரீ,

## ப. தி. பானுகவி அவர்கள் இயற்றியது

இலங்கெழி லரியவட மொழிதன்னு
ளியைந்துள பொருள் பலதிரட்டி
நலங்கொளுநீதி மாலையென்றொன்றை
நவின்றதற் குரையு நன்கியற்றிக்
கலங்கலின் றெவருமுணர்ந் திடப்புரிந்தான்
கலைமகள் கண்ணருள் படைத்த
பொலங்கொளுமேன்மை நடேசனென் றெவரும
புகழ்தருபுனித நாவலனே.

வந்தவாசி சோதிடம் சித்திரகவி மகாவித்வான் ம-ள-ள-ஸ்ரீ,

## வி. தருமராய முதலியார் அவர்களியற்றிய

### எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சீர்கொண்ட பெருங்கடம்ப னூரில் வாழும்
திருவிருக்குங் குருசாமி நாட்டார் வேளி
னேர்கொண்ட தவத்துதித்த பெருமை யான
னெம்மனோர்க் கதியன்ப னறுமுகத் தோன்
ஞர்கொண்ட துணையடிக டுதிகரு நீரான்
றுரைகள் புகழ் நடேசகவி நீதிமாலைப்
பேர்கொண்ட வோர்நூலை விருத்த யாப்பாற்
பேசினு னெவரிதுபோற் பேசி னாரே

---

வித்வான் வலலநகர் ம-ள-ள-ஸ்ரீ,

## வைத்தியலிங்கம்பிள்ளையவர்களியற்றிய

### வெண்பா

கற்ற பயனுங் கழிநற் பிறவிதனைப
பெற்ற பயனும் பெரிதடையச்—சொற்று
னலங்குலவச் செய்யு ணடையாற் பன்னீதி
யிலங்கு நடேசக் கவிஞ னின்று

---

சித்தூர் போர்டு ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ம-ள-ள-ஸ்ரீ,

## தஞ்சை-அரங்கசாமிப்பிள்ளையவர்களியற்றிய

### வெண்பா

முப்பொருளையோது முதனூற் பலவுணர்ந்து
செப்பினு னீதிநூற் றேர்ந்திடவே—தப்பில்
குருசாமி நாடார்தங் கோதிலாச் சீரி
னுருவான நற்சுதனன் கோர்ந்து

---

# நீதி மாலை.

---

### விநாயகர் காப்பு.

ஓத நீர்க்கடல் சூழுலகிற்பல
நீதி மாலை நிகழ்த்த நிமலியோ
டாதியாம்பர ஞானருளைங்கரன்
போதமெய்ப்பதம் போற்றிப் பணிகுவாம்,

### அவையடக்கம்.

---

கண்டு டன்முக்கனிதேனுங் கலந்ததுபோ லினிதாகக் கவிசெய்வல்ல
பண்டிதர்கண்முன் றுணிவாய்ப்பலநீதி வடமொழியைப் பரிவினுய்ந்து
கொண்டனைப்போற் றென்மொழியில் விருத்தப்பாவாய்ச் சிறியன் கிளத்தினேனிம்
மண்டலமேன் மாசகற்றிக்கொள்ளுவது மேலோர்கண் மாட்சியாமே

### நூல்.

---

### எழுசீரடியாசிரிய விருத்தம்.

உலகினிற் கதிரோ னொளிபகல்பரப்பு
முயர் மதியானவ னிசியில்
இலகுவான் செய்த வினிய நல்லறமோ
வெழில்பெறு மூவுலகினிலுந்
திலகமாய்ப் பொலியுமல்லது மதியிற்
சிறந்தவோர் பிள்ளையின் புகழே

DR. U.V. SWAMINATHA IYER LIBR
BESANT NAGAR, MADRAS-600 090.

அலகிலா தீரேழ் புவனமும் பரவு
மவன் குலமென்றும் வாழியவே.

(இ-ள்) சூரியன் பகலொன்றையே விளக்குவான், சந்திரன் இரவொன்றையே விளக்குவான், ஒருவன் செய்த சிறந்த தருமமானது மூன்று லோகத்திலும் விளங்கும், ஒருபுத்திரன் தன்னுடைய நற்குண நற்செய்கையினால் வந்த புகழால், அவன் வமிசங்களெல்லாம் செழிக்க, அயன்படைத்த அண்டங்களெல்லாவற்றிலும் விளங்கும். 1

மாசுள கலையை மருங்கணிந் தவனு
மட்டிலா வன்ன முண்பவனுந்
தேசுறத் தன்பற் றேத்திடா துண்போன்
றின முதயத்து மாலையினுங்
கூசமி றுயிலைக் கொள்ளுவோ னிழிசொற்
கூறுவோ னிவர்களச் சுதன்போல்
ஆசறு மேனி படைத்து வாழ்ந்தாலும்
அகலுவர் பொன்னைச் சத்தியமே.

(இ-ள்) அழுக்குத்துணியைத்தரிப்பவன், அதிகமாய்ச்சாப்பிடுகிறவன், ஒளிபொருந்த பல்லைத்துலக்காமல், உண்பவன், சூரியோதயத்திலும் அஸ்தமானத்திலும் அச்சம்விட்டுத் தூங்குபவன், சதா வீண் பேச்சுகளைப் பேசுகிறவன், ஆகிய இவர்கள், திருமாலைப்போல் அழகைப் படைத்திருந்தாலும், சீதேவியை நீங்குவார்கள். (எ-று) 2

தலமதி லொருவன் குலத்தொழில் செய்தல்
தலையதா மல்லது வேறோர்.
குலமதிற் குரிய தொழிலையே செய்துட்
கொள்ளுத லிடையதா மன்றி
சலமிலா தென்றுஞ் சேவகஞ் செய்தல்
சஞ்சலங் கடையிலும் கடையாம்
புலைகளவா லுய்வதைவிட வுயிரைப்
போக்குதலே புகழாமே.

(இ-ள்) பூமியில் ஒருவன் தன்குலத்தொழிலைச் செய்து ஜீவிப்பது உத்தமம். வேறோர் தொழிலைச் செய்தல் மத்திமம். அசசத்தைத் தருவதான சேவகம் செய்து ஜீவிப்பது அதமம். திருடிச் சீவனம் செய்வதைவிட உயிரை விடுவது நன்மையாம். (எ-று) 3

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பூதலத்தி லாடவரைக் காட்டிலுமே பொற்புறு
பூங்குழலி னார்க்கு
வோதனமோ விருபாக மொப்பிலாப் பெருமதிதா
னொரு நான்காகும்
போதவலி யிருமூன்று பங்காகுப் புல்லறிவோர்
புகழ்ந்து பேசிக்
காதலுறுங் காமமக மெண்மடங்கா மெனமறைகள்
கழறு மன்றே.

(இ-ள்) உலகத்தில் புருஷர்களுக்குமேல் பெண்களுக்குச் சாப்பாடு இரண்டு பங்கு, அறிவு நான்கு பங்கு, வலி ஆறு பங்கு, அற்பகுணமுடைய மூடர்கள் களித்துப் பேசும்படியான காம இச்சை, எட்டுப் பங்கு என்று மேலாகிய வேதங்கள் கூறுகின்றன. (எ-று) 4

அரியவரங்களை வறியோர்க் களிப்பவரு மழுங்கிய
வாலயத்தை யன்பாய்ச்
சரியாகச் சீர்திருத்தி வேதநூ லாகமநூல்
சாற்றும் வண்ணம்
மரியாத பூசைபுரி விப்போரும் பிணமடக்க
மகிழ்வாய்ச் செய்வோர்
பரிமேத யாகபல னடைவரெனப் பன்னூலும்
பகரு மன்றே.

(இ-ள்) தரித்திரர்களுக்குத் தானங்கொடுத்தவர். க்ஷீணமடைந்து பூஜை நைவேத்திய மில்லாதிருக்கிற கோயிலைச் சீர்திருத்துவோர். ஆதரவற்ற பிணத்தையடக்கஞ்செய்வோர். இவர்கள் அஸ்வமேதயாக பலனடைவார்கள். (எ-று) 5

 IV . உ - ५६.

தன்முயர்ச்சி வந்தபொரு டலையாகு மிடையாகுந்
தந்தை செல்வம்
முன்பினுற்ற சோதரர்கள் பொருள்கடையா முனிவரர்க்கு
மோக மூட்டும்
பொன்வளருங் கொடியிடையார் பொருள்கடையிற் கடை
புகலு மீதே [யாகும்.
துன்பமுறு பாதகங்கள் யாவையினுங் கொடிதெனநூல்
சொல்லு மன்றே.

(இ-ள்) தான் சம்பாதித்த பொருள் உத்தமம். தகப்பன் வைத்த பொருள் மத்திமம். துணைவருடைய பொருள் அதமம். ஒருபெண்ணினுடைய பொருள் அதமாதமம். (எ-று) 6

மேதினியி லெழுத்துணரா வீணர்களுக் கினியமறை
விடம தாகும்
மேதினியிற் சீரணமாம் வலியில்லார்க் குண்டியது
விடம தாகும்
மேதினியிற் றரித்திரற்கு மிகுகாட்சி யெப்போதும்
விடம தாகும்
மேதினியில் விருத்தருக்கே விழைவுறுநல் லிளந்துணைவி
விடம தாமே.

(இ-ள்) உலகத்தில் எழுத்தின் பயனுணராத மூடர்களுக்கு மேன்மையைத்தரும் படிப்பு விஷமாகத் தோன்றும். ஜீரண சக்தியற்றவர்களுக்குப்போசனம் விஷமாகத் தோன்றும், தரித்திரர்க்குச் சத்விஷயமே விஷமாகத் தோன்றும், வயது முதிர்ந்தவர்களுக்கு இளம்பருவமுள்ள பெண்சாதியே விஷமாகும். (எ-று) 7

* இந்திமுன்னுண்ட வன்னத்தினை யினிப்பாக வுண்டு
சந்தனக்குழம்பை யக்கற்றணிவிருந் தெடுத்து மேனிக்
கந்தமாய்ப்பூசித் தண்ணீரதிற் றனதுருவைப் பார்த்தோ
ரிந்திரசெல்வத்தைப் பெற்றிருக்கினு மழிவ ராமே.

* இந்தி-பூனை

(இ-ள்) பூனைதின்று மிகுந்த போசனத்தையுண்பவர், அரைத்த சந்தனத்தைக் கல்லின்மேலிருந்தே பூசிக்கொண்டு தனதுவடிவத்தை நீரிலேபார்த்தவர் இவர்கள் இந்திரனைப்போல் மேலாகிய செல்வத்தை அடைந்திருந்தாலும் நாளுக்குநாள் குறைந்து கஷ்டத்தை யனுபவிப்பார்கள். (எ-று) 8

அன்புடன்றன் மனைவாயி லடுத்ததிதி யனையகற்றி
யவன்கண் பார்க்க
இன்புடனன் னீர்பருகி லிழிந்தகள்ளை யருந்தியதற்
கிணையா மன்றி
நன்படுவாற் போனகந்தா ன்கொண்டு புசித்தாலதிக
நலனுற் றோங்கும்
வன்புடைய கோவினது வள்ளூர மதையுண்டல்
மானு மன்றே,

(இ-ள்) தன்மனையைத் தேடி வந்த அதிதியை விட்டு அவன் பார்க்க தாகபானம்செய்தால் அது இழிவு பொருந்திய கள்ளைக் குடித்தது போலாம். பரிசுத்தமாகிய அன்னத்தைப் புசித்தால் மேலானகுணமுடைய பசுவினது மாமிசத்தை யுண்டது போலாம். 9

## கலிவிருத்தம்.

---

அரியசெல்வ மணியுரிச் செவ்வண
மரியகோத்திர மாயு ளளவிரை
வரியசீர்த்தி யடையினு நன்மைசேர்
அரியகல்வி யிலான்சவ மாவனே.

(இ-ள்) சிறந்தசம்பத்து, அழகு, வாலிபம், வயது, நல்லகோத்திரம், மிகுபுகழ், இவைகளிருந்தாலும், கல்வியில்லாதவன் பிணத்துக் குசமானமானவன். (எ-று.)

கந்துளந் தாசியுங் கருணீகனீ
* வந்துவாழுமூர் வல்லதிகாரியும்
அந்தமாக வேற்போனு மானியோர்க்
கெந்தநாளு மிடரைப் புரியுமே.

(இ-ள்) பெருச்சாளி, அடிமைக்காரி, கணக்கன், காற்று, ஈ, கிராமாதிகாரி, பிரஜைக்காரன், ஆகிய இந்தவெழும்குடிகளை வருத்தும்,

## கலிப்பா

கன்னியர்க்கோ மேன்மைதரு கற்புநிலை கவினுகுந்
துன்னுகருங் கோகிலத்தின் றொனியதற்கோ ரொப்பாகும்
பன்னரிய மறையனைத்தும் பயிலல்குரு விற்கெழிலாம்
மன்னுபெருஞ் சாந்தமிகு மாதவத்தோர்க் கணியாமே.

(இ-ள்) உலகத்தில் பெண்களுக்கு அழகு பதிவிரதமாகும், குயிலுக்கு அழகு அதன் ஓசையேயாகும். குருவென்பவருக்கு அழகு, மிகு கல்வி கற்றலாம். தபசிகளுக்கு அழகு சாந்தமாகும். (எ-று) 12

## கலிச்சந்த விருத்தம்.

நாவதா லுயர்ந்தசெல்வ நண்ணி நன்மையைத்தரும்
நாவதாற் கிளைஞரோடு நண்பரும்வந் தெய்துவார்
நாவதாற் றனலனகன்று நலனில்காவல் சேருவார்
நாவதாற் றனியுயிர்க்கு நாசமெய்தி விடுவரே.

(இ-ள்) ஒரு மனிதனுக்கு மேலான சம்பத்தும், பெருமையும். சுற்றத்தார் சிநேகிதர் முதலோர் தன்னைவிட்டு நீங்காமையும், சிறைச்சாலையும், உயிர்ச்சேதமும், தனது நாவினாலே வரும் (எ-று.)

மணமிலாது தனியிருக்கு மகளிரும் மனங்கசிந்
திணையிலா தளித்தகா யிழந்தசேயும் வெம்புலித்
துணையிலாத வூணுரின் சொறுகளிலன்பு பொறைமுதற்
குணமிலாத நோன்புநாளுங் குன்றலாகு மென்பவே.

---

* வந்து-காற்று.

(இ-ள்) எவ்வண காலத்தில் கலியாணமில்லாமல் தனியே இருக்கும் பெண்ணும், தாயையிழந்த புத்திரனும், புளிப்பில்லாத சாப்பாடும், சாந்தமில்லாத தவமும் பயனடையாது. (எ-று) 14

எழுசீரடியாசிரிய விருத்தம்.

தாரணிகொ ளிறைவனுந் தனதினிய மருகனும்
தருகதி யளிக்க வல்ல
சீரணிகொ டவதரித்தே வளரு செல்வனுந்
தினமையா மேற்கு மவனும்
வாரணிகொ ளுயர்கொங்கை வாய்த்தமனைவியு மிவர்
மனையிருப் பறியா மலே [கள்
பேரணிகொள் பொருளதிக மிடவில்லை யென்றுமனம்
பின்னிடப் பேசிடு வரே.

(இ-ள்) பூமியையாளும் அரசன், சிறந்த முத்தியைக் கொடுக்க வந்துதித்தஇளம்பிராயமுள்ள புத்திரன், மருமகன், பிச்சைக்காரன், தனக்குரிய பெண்சாதி, இவர்கள் வீட்டில் செல்வத்தின் உண்மை யின்மை அறியாமல் மனங்கோணும்படியாய்ப் பேசுவார்கள். (எ-று)

தினந்தினங் கலகமது செய்துதிரி கின்றவள்
திருடுபவள் கணவற்கு முன்
மனங்களித் துண்பவள் பிறர்க்குதவி செய்கின்ற
மாதுபர புருட ரோடு
தனங்குலுங்கிட மொழிக ளாடுபவ ளயல்வீடு
தன்னி லென்றுஞ் சார்பவள்
இனங்கொண்ட விவரைமகவீ ஙரந்துளா ரெனினு
மில்விட்டு நீக்க லினிதே.

(இ-ள்) சதா சண்டையிட்டுத் திரிபவள், வீட்டிலுள்ள பொருளை அபகரிப்பவள், புருஷன் உண்பதன்முன் உண்பவள், அன்னியர்க்கு உதவிசெய்பவள், பரபுருஷரோடு பரிகாசம்பேசிச்சிரிப்பவள், அயலார் மனையிலே எந்நேரமும் தங்கியிருப்பவள், இப்பெண்கள் பத்துப்பிள்ளைகள் பெற்றவர்களாயிருப்பினும் வீட்டிலிருந்து நீக்கப் படுவார்கள். (எ-று.) 16

மங்கள மிரும்புவியை யிருமூன்று தரமேகி
வலமாக வந்தபயனும்
கங்கையிற் பத்தாயிரந் தரம்மூழ்கு வதில்
கனமாக வந்தபயனும்
துங்கமுறு சேதுவிற் பலநூறு தரமுழுக
தூய்மையாய் வந்தபயனும்
அங்கமது நொந்தீன்ற வன்னையடி யொருதடவை
யன்பாய் வணங்கவருமே.

(இ-ள்) ஒருவன் ஆறுதரம் பூமியை வலம்வந்த பயனும், கங்கா நதியில் பத்தாயிரந்தரம் மூழ்கியதால வந்தபயனும், சேதுவில் அநேக நூறுயிரந்தரம் மூழ்கியதால் வந்தபயனுய, பெற்றதாயை ஒருமுறை வணங்குவதால் வரும் (எ-று.) 17

அறுசீரடி யாசிரிய விருத்தம்

வசுமதியிற் றாசியினை மருவினுற் றனக்குரிய
மானம் போகும்
பசியகிற விலைமாதர் சேர்க்கையினுற் பொருளழிந்து
பழிப் புண்டாகும்
இசையுறு மங்கலமிழந்த பெண்புணர்ச்சி வயதுடனே
எழிலுங் குன்றும்
வசையிலயன் மனைபுணர்ச்சி வாழ்வுமுத லானதும்போய்
மரண மாமே.

(இ-ள்) தாசியின் சேர்க்கையால் மானம் போகும், வேசியின் புணர்ச்சியால் பொருள் அழிந்து பழிப்புண்டாகும், விதவையி னுடையபுணர்ச்சியால் ஆயுள்குறைந்து அழகு கெடும், பாதார சங்கமத்தினுல் சகலமுங்கெட்டு மரணமுண்டாகும். (எ-று.) 18

சக்கிரியின் பாண்டங்கள் வெவ்வேறாய் மண்ணொன்றே
சமைந்தவா போல்
மிக்கபல விதவணிகள் தட்டாறுற் பொன்னொன்றே
விளங்கினுற் போல்

தக்கபல யோனியிலும் வந்தசராசரங்கள் முழுதுந்
தனிமை யாக
அக்கரவம் புனைபவனே ஜீவாத்மா வாயங்கங்
கமர்வ னன்றே.

(இ-ள்) மண் ஒன்றே பலவடிவப் பாத்திரங்களாவதுபோலவும், பொன் ஒன்றே அநேக ஆபரணமாவது போலவும், சிவபெருமான் ஒருவனே அளவிலலாத ஜீவாத்மாவாக விளங்குகிறான். (எ-று.) 19

காதலர் தம்மை யீனுங் காரிகை யனுப விக்கும்
வாதனை மகப் பெறாத மாதறியா ளதைப் போல்
பேதமில் லாமல் கற்றோர் பெருமையைக் கொஞ்சங் கொ
காதினி லோதினாலுங் கயவர்க ளறியா ரந்தோ. [ஞ்சங்

(இ-ள்) உலகத்தில் பிரசவவேதனைப்படுபவளின் வருத்தத்தை மலடியறியாள். அதைப்போல், கற்றவர்களின் அருமை பெருமைகளைக் கல்லாதவர் அறியார் (எ-று.) 20

செல்லலை யளிக்கு நோயர் சிறுவர்கள் கிழவர் சீலர்
சொல்லு நால்வகைய ருக்குச் சுருதியின் விதித்த வாறு
நல்ல நோன்புக ளிருந்து நடக்க வெண்ணங் கொண்டாலும்
இல்லாம லிடையிற் போகுமென்று சொல்லுவ ரான்றோரே

(இ-ள்) நோயர், பாலர், கிழவர் ஆசாரமுடையவர், இவர்கள் விரதங்களை இடையில் விடுவார்கள். (எ-று.) 21

இனிய சங்கீதம் வீர மிணையிலாக் கவி சமைத்த
லினிய மாதான மாகு மிவையெலா மெழிலுற் றோங்கு
மினிய நற்கல்வி தன்னு லியற்கையாய்த் தோன்று மல்லா
லினிய வேறொருவர் சொல்லா லெவருக்கு முண்டா காதே.

(இ-ள்) தித்திப்பானபாடல், சௌரியம், அழகாகிய தானம் கவித்வம், இவைகளெல்லாம் இயற்கையாய் வரவேண்டுமேயன்றி, ஒருவர் சொலலால் வராது (எ-று.) 22

அன்பாகச் செய்தான மெவற்றினுக்கு மன்னமிடல்
அதிக மாகும்
அன்பாகப் புரிகின்ற நோன்புகட்குத் துவாதசியே
யதிக மாகும்
அன்பாகக் கூறுகின்ற மந்திரத்துட் காயத்ரி
யதிக மாகும்
அன்பாகத் தொழுதேத்துங் கடவுளினு மீன்றவளே
யதிக மாமே.

(இ-ள்) உலகத்தில அன்னதானத்தைவிட வேறுதானமும் துவாதசிக்கு மேலான விரதமும், காயத்ரியைவிட வேறுமந்திரமும் தன்தாயைவிட மேலான தெய்வமும், இல்லை. (எ-று.) 23

தெண்டிரைக் கடலை முன்னே சிகரியாற்
கடைந்த நாளில்
விண்டுபூ வாழுமாதை மேவினு னுமை
பாகன் மேற்
கொண்டெழு விடந்தைக் கொண்டான் குவலயத்
துள்ளோர்க் கெல்லாம்
அண்டிய செலவ மிவ்வா றுமெனச்
சொல்லு நூலே.

(இ-ள்) ஒரேயிடத்தில ஒரேகாலத்தில ஒருவருக்கு இலக்குமியும், மற்றொருவருக்கு விடமுங், கிடைத்ததுபோல இவ்வுலகத்தில் யாவர்க்கும் செல்வமும் வறுமையும் இவ்வாறே வரும். (எ-று.) 24

மாசுணந் தனக்குத் தீம்பால் வாக்கினு
மம்மர் கொள்ளு
மாசறு விடத்தைக் கைம்மா றளித்திடு
மதுபோற் கெட்ட
நீசருக் குபகாரந் தானிரந் தரம்புரிந்
திட் டாலுங்
காசனுஞ் செய்வா ரன்றிக் களிப்பினை
நல்கி டாரே.

(இ-ள்) கொடிய விஷமுடைய பாம்புக்கு, எத்தனை பிரியமாய் பால்வார்த்து வளர்த்தாலும், அது வளர்ப்பவனுக்கு நஞ்சைக்கொடுப்பதுபோல், புலையருக்கு என்ன நன்மையைச் செய்தபோதிலும் அவர்கள் தீமையாகிய காரியங்களைச் செய்வாரேயன்றி நன்மை புரியார். (எ-று.) 25

மண்ணுலகிற் செனித்திருக்கு மாந்தர்களுக் குறுசினமோ
மறலி போலா
மெண்ணரிய பேராசை வைதரணி யெனுநதிபோ
லிலங்குந் தூய
வண்ணமிகுங் கல்வியோ வானாட்டின் சுரபியைபபோல்
மகிழ்ச்சியோ தான்
புண்ணியநந் தனம்போலப் பொலியுமென மாமறையும்
புகலு மன்றே.

(இ-ள்) கோபம், எமனைப்போலவும், ஆசை, அந்த எமபுரத்திலோடும் வைதரணி ஆற்றைப்போலவும், வாசிப்பின் குணம், தேவலோகத்தில் வசிக்கும் காமதேனுவைப்போலவும், சந்தோஷம், பூந்தோட்டத்தைப்போலவும், இந்த நிலவுலகத்தில விளங்கும். (எ-று)

காதலியும் புத்தகமும் கைப்பொருளு மன்னியர்தங்
கைக்குப்போனாற்
றீதுற்று வருமனைவி புத்தகமோ வேடெழுத்தின்
சீர கன்று
கோதுற்று வந்திடும் பின்கொடுத்த பொருள்மிகக்
குறைவாய்க்குறுகு மென்றிப்
போதமிகும் புவியோர்க ளோர்ந்திடபொற் போங்குமறை
புகலு மன்றே.

(இ-ள்) பத்தினி, புத்தகம், பொருள், இவைகளை, ஒருவர் கைல் கொடுத்தால் பத்தினி, கர்பகன்று வருவாள், புத்தகம், கிழிந்து கவிதரும், தனம், குறைவாக வருமென்று அழகியவேதம்சொலலும் (எறு)
௨௭

ப்புறு வயது செல்வம் செழுமனக் குறிப்பு மந்த்ரம்
றப்பொழி மருந்து தாழ்வு மில்லவள் தோள் புணர்ச்சி
றப்புறு தான மான மொன்பது மறிவின் மிக்கத்
திறப்படு மனத்தோர் யார்க்குந் தெரிந்திடச்செப்பாரன்றே

(இ-ள்) தன்னுடைய வயது, செல்வம், மனத்திலிருக்கும் இரகசியம், தானடைந்த மந்திரம், உயிரைக் காக்கத்தகுந்த அவுடதம், தனக்குரிய தாழ்மை, மனைவியின் சேர்க்கை, வலிவாகிய தானம், பெருமை, இந்த ஒன்பதையும் அறிவிற் சிறந்தவர்கள் அன்னியருக்குச் சொல்லார்கள் (எ-று.) 28

அரிகுருளை மூன்றீன்றுங் கொடுவரியைந் தீன்றுமுய
ரதாமந் தன்றாற்
பெருகாமற் குறையுமிந்தப் பேருலகிற் பசுவொன்றே
பெருமை யாக
வொருகன் றீன்றிடினு மதனுயரறத்தால் விரிவாகி
யோங்குமா போற
றிருகலிலா நல்லறமொன் றேநாளு மிகச்செழிக்கச்
செய்யு மன்றே.

(இ-ள்) சிங்கம் மூன்று குட்டிகள் போட்டும், கொடிய குணமுடைய புலி ஐந்து குட்டிகள் போட்டும், அவைகளுடைய குலம் அதிக பலிதமில்லாமல், குறைந்து போகிறது மேன்மை பொருந்திய பசுவானது ஒரு கன்றைப் போட்டாலும், அதன் தருமகுணத்தால் விசேஷமாய்ப் பரவி இருக்கிறது. ஆனதால் புண்ணியமே யென்றும் செழித்தோங்கச் செய்யும். (எ-று.) 29

இல்லவள் புதல்வர் செல்வம் இவைமுதல் யாவு மாவி
சொல்லாமற் போகும்போது துணையெனவொன் றும்வாரா
மல்லாற் செய்யறமு மிந்த மணவிணனும் பரவுங் கீர்த்தி
நல்லோர்க ளெச்சம் போலெந் நாளினுந் துணைய தாமே.

(இ-ள்) பெண்சாதி, புத்திரர், செல்வம், முதலிய யாவும் தன் உயிர்போகுங் காலத்தில் கூடவாராது. தான்செய்த தருமமும் அத்தருமத்தால் வந்த கீர்த்தியுமே அந்தியத்தில் துணையாக வரும். 30

முற்றிற்று.